तत्कालं प्राप्स्यसि हरिं मा कान्ते कातरा भव।
इत्युक्त्वा च दिनान्ते च तया सार्धं मनोहरम्।। ७२
सुष्वाप शोभने तल्ये पुष्पचन्दन चर्चिते।
नानाप्रकारविभवं चकार रत्नमन्दिरे।। ७३
रत्नप्रदीपसंयुक्ते स्त्रीरत्नं प्राप्य सुन्दरीम्।
निनाय रजनीं राजा क्रीडाकौतुकमङ्गलैः।। ७४
कृत्वा वक्षसि तां कान्तां रुदतीमतिदुःखिताम्।
कृशोदरीं निराहारां निमग्नां शोकसागरे।। ७५
पुनस्तां बोधयामास दिव्यज्ञानेन ज्ञानवित्।
पुरा कृष्णेन यद्दत्तं भाण्डीरे तत्त्वमुत्तमम्।। ७६
स च तस्यै ददौ सर्वं सर्वशोकहरं परम्।
ज्ञानं संप्राप्य सा देवी प्रसन्न वदनेक्षणा।। ७७
क्रीडां चकार हर्षेण सर्वं मत्वेति नश्वरम्।
तौ दम्पती च क्रीडन्तौ निमग्नौ सुखसागरे।। ७८
पुलकाञ्चितसर्वाङ्गौ मूर्च्छितौ निर्जने मुने।
अङ्गप्रत्यङ्गसंयुक्तौ सुप्रीतौ सुरतोत्सुकौ।। ७९
एकाङ्गौ च तथा तौ द्वौ चार्धनारीश्वरो यथा।
प्राणेश्वरं च तुलसी मेने प्राणाधिकं परम्।। ८०
प्राणाधिकां च तां मेने राजा प्राणेश्वरीं सतीम्।
तौ स्थितौ सुखसुप्तौ च तन्द्रितौ सुन्दरौ समौ।। ८१
सुवेषौ सुखसंभोगादचेष्टौ सुमनोहरौ।
क्षणं सुचेतनौ तौ च कथयन्तौ रसाश्रयात्।। ८२

कथां मनोरमां दिव्यां हसन्तौ च क्षणं पुनः ।
क्षणं च केलिसंयुक्तौ रसभावसमन्वितौ ।। ८३
सुरते विरतिर्नास्ति तौ तद्विषयपण्डितौ ।
सततं जययुक्तौ द्वौ क्षणं नैव पराजितौ ।। ८४

*इति श्री देवीभागवते महापुराणे नवमस्कन्धे विंशोऽध्यायः ।।*

—★—

## அத்தியாயம் 20

நாரதரிடம் நாராயணர் கூறுகிறார். பிரும்மா சிவனை அஸுரனையழிக்க அமர்த்தியபின் தன் உலகம் சென்றார். சந்திரபாகா நதிக் கரையில் ஆலமரத்தடியில் தேவர்களுக்கு நன்மை புரிவதற்காக, சித்ரரதன் என்ற கந்தர்வனை சங்கசூடனிடம் சிவன் அனுப்பினார்.

ஸர்வேச்வரனின் ஆணையை ஏற்று, தூதன் சங்கசூடனின் மாளிகைக்குச் சென்றான். இந்திரன் குபேரன் மாளிகைகளைவிட அது அழகானது. ஐந்து யோசனை பரப்பும் பத்து யோசனை நீளமும் கொண்டது. படிகக்கற்களால் அமைந்தது, ஏழு அகிழ்கள். அவற்றின் சுற்றுச் சுவர்கள் ரத்தினத்தால் அமைந்தவை. நூற்றுக் கணக்கான வீதிகள், கடைத் தெருக்கள், கோடிக் கணக்கான ஆச்ரமங்கள். நடுவே வட்ட வடிவில் சங்க சூடனின் மாளிகை. சந்திர மண்டலம் போன்றது. வானைத் தொடுகிற உப்பரிகைகள். பன்னிரண்டு வாயில்கள். வாயில் காப்போரின் கட்டுப்பாட்டில் உள்ளவை. லக்ஷக்கணக்கான வீடுகள். புஷ்பதந்தன் என்ற சிவதூதன் காவலனை அணுகித் தான் வந்த காரணத்தைக் கூற, உள் பிரவேசத்திற்கு அனுமதி பெற்ற காவலன் வழிவிட ஆயிரம் சூரர்களிடையே ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்துள்ள சங்கசூடனை அணுகி சிவபெருமான் கூறியதைத் தெரிவித்தான்.

''அரசரில் சிறந்தவரே! சிவனின் தூதன் புஷ்பதந்தன் என்ற நான் பெருமான் கூறியதைச் சொல்கிறேன். தேவர்களிடம் அவர்களது ராஜ்யத்தைத் திரும்பத் தருவாய் ! விஷ்ணுவிடம்

சரணமடைந்த தேவர்கள் கோரியபடி விஷ்ணு சிவனிடம் சூலம் தந்துள்ளார். புஷ்ப பத்ரா நதிக் கரையில் சிவன் காத்திருக்கிருர். தேவர்களிடம் ராஜ்யத்தைத் தாரீர். அல்லது போரிடுவீர். சிவபெருமானிடம் நான் தெரிவிக்க வேண்டியதைக் கூறுவீர் !'' தூதனின் பேச்சைக் கேட்ட சங்கசூடன் நாளைக் காலை நானே நேரில் சிவனிடம் தெரிவித்துக் கொள்கிறேன். நீ செல்லலாம் என்ருன். ஆலமரத்தடியில் சிவனிடம் நடந்ததைத் தூதன் தெரிவித்தான்.

இதனிடையே ஸ்கந்தன் சிவனருகே வந்தார். அவருடன் வீரபத்திரர், நந்தி, மஹாகாலர், ஸுபத்ரகர், விசாலாக்ஷர், பாணர், பிங்களாக்ஷர், விகம்பனர், விரூபர், விக்ருதி, மணிபத்ரர், பாஷ்கலர், கபிலர், தீக்ஷ்ண தம்ஷ்ட்ரர், விகடர், தாம்ரலோசனர், காலகண்டர், பலீ, பத்ரர், காளஜிஹ்வர், குடீசரர், பலோன்மத்தர், ரணச்லாகீ, துர்ஜயர், துர்கமர், எட்டுபைரவர்கள், பதிஞெரு ருத்ரர்கள், எட்டு வஸுக்கள், இந்திரன், பன்னிரு ஆதித்தியர்கள், அக்னி, சந்திரன், விச்வகர்மா, அச்வினிகள், குபேரன், யமன், ஜயந்தன், நளகூபரன், வாயு, வருணன், புதன், அங்காரகன், யமன், சனி, ஈசானன், மன்மதன் முதலியவர்களும் உக்ரதம்ஷ்ட்ரா, உக்ரதண்டா, கோடரா, கைடபீ முதலாஞேரும் வந்தனர். எட்டு கைகளுள்ள பத்ரகாளி ரத்தின விமானத்தில் அமர்ந்தவளாக, செவ்வாடையுடுத்திவளாக, ஆடியும் பாடியும் சிரித்தும் பக்தர்களுக்கு அபயம் அளிப்பவளாக சங்கு, சக்கரம், கதை, தாமரை, கத்தி, கேடயம், வில், அம்பு, கப்பரை, வாளை எட்டுகிற த்ரிசூலம், யோசனையளவு நீண்ட சக்திவேல், குருந்தடி, உலக்கை, வஜ்ரம், கேடயம், பலகை, வைஷ்ணவ - வாருண - அக்னி - நாராயண - காந்தர்வ - பிரும்ஹ - கருட - பர்ஜன்ய - பாசுபத - ஜ்ரும்பண - பர்வத - மாஹேச்வர - வாயு - ஸம்மோஹனுஸ்திரங்கள் இவற்றை ஏந்தியவளாக மூன்று கோடி யோகினிகளும் டாகினி விகடா யோகினிகள், பூத - ப்ரேத - பிசாச - கூஷ்மாண்ட - பிரும்மராக்ஷஸ - வேதாள, ராக்ஷஸ - யக்ஷ - கின்னரர்களின் படையுடன் காளி முன் நின்ருள். இவர்களுடன் ஸ்கந்தர் தன் தந்தையை வணங்கி ஆணையேற்க, துணை புரிய அருகில் நின்ருர்.

தூதன் சென்றதும் சங்க சூடன் துளசியிடம் போர் நிகழ விருப்பதைச் சொன்ஞன். இதனைக் கேட்டதும் துளஸி பயந்து தொண்டை உதடு வரண்டவளாக உள்ளம் துயருற்றுக் கணவனிடம் கூறினுள்'' உயிருக்குயிரான நாதனே ! சிறிது நேரம் என்னை மார்புற அணைத்துக் கொள்வீர். என் உயிரைக் காப்பீர் ! என் உயிர் ஊசலாடுகிறது. என் உள்ளம் எரிகிறது. நேற்றிரவு கடைசியாமத்தில் கெட்டகனவொன்று கண்டேன்'' எனப் புலம்புகிற துளசியின் பேச்சைக் கேட்டு அந்த அறிஞன் இதமும் ஸத்யமும் அப்போது ஏற்றதுமாகப் பேசினுன்.

சங்க சூடன் கூறினுன் - காலம் அனைத்தையும் இணைக்கிறது. வினை இன்பதுன்பங்களைக் கட்டுப்படுத்துகிறது. மங்களம் மகிழ்ச்சி, இன்பம், துன்பம், பயம் சோகம், என அனைத்தும் காலத்தால் நேர்பவை. மரம் வளர்வதும் கிளைப்பதும், பூப்பதும் காய்ப்பதும் காய் பழுப்பதும் காலத்தை ஒட்டியவை. காய்ப்பதும் மரம் விழுவதும் காலத்தால். உலகமும் அவ்வாறே காலத்தால் தோன்றி வாழ்ந்து மறைகிறது. மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்ட ப்ரக்ருதி தேவிதான் படைத்துக் காத்து அழிக்கிருள். பரப் பொருள் காலத்தால் தான் தன்னைவிட்டுப் ப்ரக்ருதியைத் தனியே பிரிக்கிறது. அதன் மூலம் உலகத்தை விரிவாக்குகிறது. மக்களை மக்களே பெறுவதும் காப்பதும் அழிப்பதுமாக மக்களைக் கொண்டே உலகை உருவாக்குகிறது. அதனிடம் பயந்தே வாயு அசைகிறது; சூரியன் கொளுத்துகிருன்; இந்திரன் மழை பொழிகிருன்; யமன் உயிரைப் பறிக்கிருன்; அக்கினி எரிக்கிருன்; சந்திரன் பூமியைச் சுற்றுகிருன். மிருத்யுவிற்கு அது யமன். படைப்பவனையும் படைப்பது. அழிப்பவனை அழிப்பது; காப்பவனுக்கும் தாய் போல் காப்பது. அவரைச் சரணடைவாய். எல்லோருக்கும் பந்து அவரே ! அவரைச் சரணடைவாய்.

நீயாரோ ! நான் யாரோ ! விதிதான் நம்மை இணைத்தது. வினை நம்மைப் பிரிக்கிறது. அறியாதவன் துயருறும்போது பயமடைவான். காலம் சுழலுகையில் நாமும் இன்பத்திலும் துன்பத்திலும் சுழல்கிருேம். நாராயணனே உனது நாதன். அவனைக் குறித்தே பதரிகாச்ரமத்தில் தவம் புரிந்தாய். அந்தத்

தவத்தின் பயஞக, பிரும்மாவின் அருளால் நான் உன் கணவஞனேன். நாராயணனைக் குறித்து நீ செய்த தவத்தால் ஹரியை நீ அடைவாய். கோலோகத்தில் பிருந்தாவனத்தில் கோவிந்தனை அடைவாய். நானும் இந்த அஸுர உடலை விட்டு அந்த லோகத்தை அடைவேன். ஏன் வருந்துகிருய்? நீயும் இந்த உடலைவிட்டு தேவி உருவம் பெற்று ஹரியை அடைவாய் - பயப்படாதே!

இவ்வாறு ஆறுதலளித்து அவளை மார்போடு அணைத்து விளையாட்டிலும் கொண்டாட்டத்திலும் பொழுதைப் போக்கி அவளை மகிழ்வித்தான்.

மறுபடி கிருஷ்ணன் பாண்டீர வனத்தில் தனக்கு உபதேசித்த தத்வத்தை அவளுக்குப் போதித்தான். அவள் அதஞல் துயரம் நீங்கியவளாக முகம் மலர்ந்து அவனுடன் மகிழ்ச்சியுடன் நிலையற்றவற்றைப் பற்றி வருந்தாமல் இன்புற்ருள். உடலோடு உடல் ஒட்டி அர்த்த நாரீச்வரர்களாக இணைந்தனர். துளஸி சங்கசூடனிடம் அன்புப் பெருக்கால் அதிக நாட்டம் கொண்டாள். இரவு முழுவதும் கதைபேசிச் சிரித்துக் கொண்டே வாழ்வில் வெற்றி கண்டனர். அவர்கள் என்றும் எதிலும் தோற்கவில்லை.

— ★ —

## एकविंशोऽध्यायः

श्रीकृष्णं मनसा ध्यात्वा रक्षः कृष्णपरायणः ।
ब्राह्मे मुहूर्त उत्थाय पुष्पतल्पान्मनोहरात् ।। १
रात्रिवासः परित्यज्य स्नात्वा मङ्गलवारिणा ।
धौते च वाससी धृत्वा कृत्वा तिलकमुज्ज्वलम् ।। २
चकाराह्निकमावश्यमभीष्टदेववन्दनम् ।
दध्याज्यमधुलाजांश्च ददर्श वस्तु मङ्गलम् ।। ३
रत्नश्रेष्ठं मणिश्रेष्ठं वस्त्रश्रेष्ठं च काञ्चनम् ।
ब्राह्मणेभ्यो ददौ भक्त्या यथा नित्यं च नारद ।। ४

अमूल्यरत्नं यत्किञ्चिन्मुक्तामाणिक्य हीरकम्।
ददौ विप्राय गुरवे यात्रामङ्गलहेतवे ॥ ५
गजरत्नमश्वरत्नं धनरत्नं मनोहरम्।
ददौ सर्वं दरिद्राय विप्राय मङ्गलाय च ॥ ६
भाण्डाराणां सहस्राणि नगराणां द्विलक्षकम्।
ग्रामाणां शतकोटिं च ब्राह्मणाय ददौ मुदा ॥ ७
पुत्रं कृत्वा तु राजेन्द्रं सर्वेषु दानवेषु च।
पुत्रं समर्प्य भार्यां तां राज्यं च सर्वसम्पदम्॥ ८
प्रजानुचरसङ्घं च भाण्डारं वाहनादिकम्।
स्वयं सन्नाहयुक्तश्च धनुष्पाणिर्बभूव ह ॥ ९
भृत्यद्वारा क्रमेणैव चकार सैन्यसंचयम्।
अश्वानां च त्रिलक्षेण लक्षेण वरहस्तिनाम्॥ १०
रथानामयुतेनैव धानुष्काणां त्रिकोटिभिः।
त्रिकोटिभिर्वर्मिणां च शूलिनां च त्रिकोटिभिः ॥ ११
कृता सेनाऽपरिमिता दानवेन्द्रेण नारद।
तस्यां सेनापतिश्चैव युद्धशास्त्रविशारदः ॥ १२
महारथः स विज्ञेयो रथिनां प्रवरो रणे।
त्रिलक्षाक्षौहिणीसेनापतिं कृत्वा नराधिपः ॥ १३
त्रिंशदक्षौहिणीबाधं भाण्डौघं च चकार ह।
बहिर्बभूव शिबिरान्मनसा श्रीहरिं स्मरन्॥ १४
रत्नेन्द्रसारनिर्माणविमानमारुरोह सः ॥
गुरुवर्गान्पुरस्कृत्य प्रययौ शङ्करान्तिकम्॥ १५

पुष्पभद्रानदीतीरे यत्राक्षयवटः शुभः।
सिद्धाश्रमं च सिद्धानां सिद्धिक्षेत्रं च नारद॥ १६
कपिलस्य तपः स्थानं पुण्यक्षेत्रं च भारते।
पश्चिमोदधिपूर्वे च मलयस्य च पश्चिमे॥ १७
श्रीशैलोत्तरभागे च गन्धमादनदक्षिणे।
पञ्चयोजनविस्तीर्णा दैर्घ्ये शतगुणा तथा॥ १८
शुद्धस्फटिकसंकाशा भारते च सुपुण्यदा।
शाश्वती जलपूर्णा च पुष्पभद्रा नदी शुभा॥ १९
लवणाब्धिप्रिया भार्या शश्वत्सौभाग्यसंयुता।
शरावतीमिश्रिता च निर्गता सा हिमालयात्॥ २०
गोमतीं वामतः कृत्वा प्रविष्टा पश्चिमोदधौ।
तत्र गत्वा शङ्खचूडो ददर्श चन्द्रशेखरम्॥ २१
वटमूले समासीनं सूर्यकोटिसमप्रभम्।
कृत्वा योगासनं दृष्ट्वा मुद्रायुक्तं च सस्मितम्॥ २२
शुद्धस्फटिकसंकाशं ज्वलन्तं ब्रह्मतेजसा।
त्रिशूलपट्टिशधरं व्याघ्रचर्माम्बरं वरम्॥ २३
भक्तमृत्युहरं शान्तं गौरीकान्तं मनोहरम्।
तपसां फलदातारं दातारं सर्वसम्पदाम्॥ २४
आशुतोषं प्रसन्नास्यं भक्तानुग्रहकातरम्।
विश्वनाथं विश्वबीजं विश्वरूपं च विश्वजम्॥ २५
विश्वम्भरं विश्ववरं विश्वसंहारकारकम्।
कारणं कारणानां च नरकार्णवतारणम्॥ २६

ज्ञानप्रदं ज्ञानबीजं ज्ञानानन्दं सनातनम् ।
अवरुह्य विमानाच्च तं दृष्ट्वा दानवेश्वरः ।। २७
सर्वैः सार्धं भक्तियुक्तः शिरसा प्रणनाम सः ।
वामतो भद्रकालीं च स्कन्दं च तत्पुरः स्थितम् ।। २८
आशिषं च ददौ तस्मै काली स्कन्दश्च शङ्करः ।
उत्तस्थुरागतं दृष्ट्वा सर्वे नन्दीश्वरादयः ।। २९
परस्परं च भाषां ते चक्रुस्तत्र च साम्प्रतम् ।
राजा कृत्च संभाषामुवास शिवसंनिधौ ।। ३०
प्रसन्नात्मा महादेवो भगवांस्तमुवाच ह ।
महादेव उवाच—
विधाता जगतां ब्रह्मा पिता धर्मस्य धर्मवित् ।। ३१
मरीचिस्तस्य पुत्रश्च वैष्णवश्चापि धार्मिकः ।
कश्यपश्चापि तत्पुत्रो धर्मिष्ठश्च प्रजापतिः ।। ३२
दक्षः प्रीत्या ददौ तस्मै भक्त्या कन्यास्त्रयोदश ।
तास्वेका च दनुः साध्वी तत्सौभाग्यविवर्धिता ।। ३३
चत्वारिंशद्दनोः पुत्रा दानवास्तेजसोल्बणाः ।
तेष्वेको विप्रचित्तिश्च महाबलपराक्रमः ।। ३४
तत्पुत्रो धार्मिको दम्भो विष्णुभक्तो जितेन्द्रियः ।
जजाप परमं मन्त्रं पुष्करे लक्षवत्सरम् ।। ३५
शुक्राचार्यं गुरुं कृत्वा कृष्णस्य परमात्मनः ।
तदा त्वां तनयं प्राप परं कृष्णपरायणम् । ३६
पुरा त्वं पार्षदो गोपो गोपेष्वपि सुधार्मिकः ।
अधुना राधिकाशापाद्भारते दानवेश्वरः ।। ३७

आब्रह्मस्तम्बपर्यन्तं तुच्छं मेने च वैष्णवः ।
सालोक्य सार्ष्टिसायुज्यसामीप्यं च हरेरपि ।। ३८
दीयमानं न गृह्णन्ति वैष्णवाः सेवनं विना ।
ब्रह्मत्वममरत्वं वा तुच्छं मेने च वैष्णवः ।। ३९
इन्द्रत्वं वा मनुत्वं वा न मेने गणनासु च ।
कृष्णभक्तस्य ते किं वा देवानां विषये भ्रमे ।। ४०
देहि राज्यं च देवानां मत्प्रीतिं रक्ष भूमिप ।
सुखं स्वराज्ये त्वं तिष्ठ देवास्तिष्ठन्तु वै पदे ।। ४१
अलं भूतविरोधेन सर्वे कश्यपवंशजाः ।
यानि कानि च पापानि ब्रह्महत्यादिकानि च ।। ४२
ज्ञातिद्रोहस्य पापानि कलां नार्हन्ति षोडशीम् ।
स्वसम्पदां च हानिं च राजेन्द्र यदि मन्यसे ।। ४३
सर्वावस्था च समतां केषां याति च सर्वदा ।
ब्रह्मणश्च तिरोभावो लये प्राकृतिके सदा ।। ४४
आविर्भावः पुनस्तस्य प्रभावादीश्वरेच्छया ।
ज्ञानवृद्धिश्च तपसा स्मृतिलोपश्च निश्चितम् ।। ४५
करोति सृष्टिं ज्ञानेन स्रष्टा सोऽपि क्रमेण च ।
परिपूर्णतमो धर्मः सत्ये सत्याश्रये सदा ।। ४६
त्रिभागः सोऽपि त्रेतायां द्विभागो द्वापरे स्मृतः ।
एकभागः कलौ पूर्वं तदंशश्च क्रमेण च ।। ४७
कला मात्रं कलेः शेषे कुह्वां चन्द्रकला यथा ।।
यादृक्तेजो रवेर्ग्रीष्मे न तादृक्छिशिरे पुनः ।। ४८

दिनेषु यादृङ् मध्याह्ने सायं प्रातर्न तत्समम्।
उदयं याति कालेन बालतां च क्रमेण च ।। ४९
प्रकांडतां च तत्पश्चात्कालेऽस्तं पुनरेति सः ।
दिने प्रच्छन्नतां याति कालेन दुर्दिने घने ।। ५०
राहुग्रस्ते कम्पितश्च पुनरेव प्रसन्नताम्।
परिपूर्णतमश्चन्द्रः पूर्णिमायां च जायते ।। ५१
तादृशो न भवेन्नित्यं क्षयं याति दिने दिने ।
पुनश्च पुष्टिमायाति परं कुह्वा दिनेदिने ।। ५२
संपद्युक्तः शुक्लपक्षे कृष्णे म्लानश्च यक्ष्मणा।
राहुग्रस्ते दिने म्लानो दुर्दिने न विरोचते ।। ५३
काले चन्द्रो भवेच्छुक्लो भ्रष्टश्रीः काल भेदतः ।
भविष्यति बलिश्चेन्द्रो भ्रष्टश्रीः सुतलेऽधुना ।। ५४
कालेन पृथ्वी सस्याढ्या सर्वाधारा वसुन्धरा।
कालेन जले निमग्ना सा तिरोभूताऽबुविप्लुता ।। ५५
काले नश्यन्ति विश्वानि प्रभवन्त्येव कालतः ।
चराचरश्च कालेन नश्यन्ति प्रभवन्ति च ।। ५६
ईश्वरस्यैव समता ब्रह्मणः परमात्मनः ।
अहं मृत्युञ्जयो यस्मादसंख्यं प्राकृतं लयम्।। ५७
अदर्शं चापि द्रक्ष्यामि वारंवारं पुनः पुनः ।
स च प्रकृतिरूपं च स एव पुरुषः स्मृतः ।। ५८
स चात्मा च स जीवश्च नानारूपधरः परः ।
करोति सततं यो हि तन्नामगुणकीर्तनम्।। ५९

कालेमृत्युं स जयति जन्म रोगभयं जराम्।
स्रष्टा कृतो विधिस्तेन पाता विष्णुः कृतो भवेत्।। ६०
अहं कृतश्च संहर्ता भयं विषयिणः कृताः।
कालाग्निरुद्रं संहारे नियोज्य विषये नृप।। ६१
अहं करोमि सततं तन्नामगुणकीर्तनम्।
तेन मृत्युञ्जयोऽहं च ज्ञानेनानेन निर्भयः।। ६२
मृत्युर्मृत्युभयाद्याति वैनतेयादिवोरगाः।
इत्युक्त्वा स च सर्वेशः सर्वभावेन तत्परः।। ६३
विरराम च शम्भुश्च सभामध्ये च नारद।
राजा तद्वचनं श्रुत्वा प्रशशंस पुनः पुनः।। ६४
उवाच मधुरं देवं परं विनयपूर्वकम्।
शङ्खचूड उवाच।
त्वया यत्कथितं देव नान्यथा वचनं स्मृतम्।। ६५
तथापि किञ्चिद्यथार्थं श्रूयतां मन्निवेदनम्।
ज्ञातिद्रोहे महत्पापं त्वयोक्तमधुना च यत्।। ६६
गृहीत्वा तस्य सर्वस्वं कुतः प्रस्थापितो बलिः।
मया समुद्धृतं सर्वमूर्ध्वमैश्वर्यमीश्वरः।। ६७
सुतलाच्च समुद्धर्तुं नालं तत्र गदाधरः।
सभ्रातृको हिरण्याक्षः कथं देवैश्च हिंसितः।। ६८
शुम्भादयश्चासुराश्च कथं देवैर्निपातिताः।
पुरा समुद्रमथने पीयूषं भक्षितं सुरैः।। ६९
क्लेशभाजो वयं तत्र ते सर्वे फलभोगिनः।
क्रीडाभाण्डमिदं विश्वं प्रकृतेः परमात्मनः।। ७०

यस्मै यत्र स ददाति तस्यैश्वर्थं भवेत्तदा।
देवदानवयोर्वादः शश्वन्नैमित्तिकः सदा ॥ ७१
पराजयो जयस्तेषां कालेऽस्माकं क्रमेण च।
तदाऽऽवयोर्विरोधं वा गमनं निष्फलं परम्। ७२
समसम्बन्धिनो बन्धोरीश्वरस्य महात्मनः।
इयं ते महती लज्जा युद्धोऽस्माभिः सहाधुना ॥ ७३
जये ततोऽधिका कीर्तिर्हानिश्चैव पराजये।
इत्येतद्वचनं श्रुत्वा प्रहस्य च त्रिलोचनः ॥ ७४
यथोचितमुत्तरं तमुवाच दानवेश्वरम्।
महादेव उवाच—
युष्माभिः सह युद्धे मे ब्रह्मवंशसमुद्भवैः ॥ ७५
का लज्जा महती राजन्न कीर्तिर्वा पराजये।
युद्धमादौ हरेरेव मधुना कैटभेन च। ७६
हिरण्यकशिपोश्चैव सह तेनात्मना नृप।
हिरण्याक्षस्य युद्धं च पुनस्तेन गदाभृता ॥ ७७
त्रिपुरैः सह युद्धं च मयाऽपि च पुरा कृतम्।
सर्वेश्वर्याः सर्वमातुः प्रकृत्याश्च बभूव ह ॥ ७८
सह शुम्भादिभिः पूर्वं समरः परमाद्भुतः।
पार्षदप्रवरस्त्वं च कृष्णस्य परमात्मनः ॥ ७९
ये ये हताश्च दैतेया न हि केऽपि त्वया समाः।
का लज्जा महती राजन्मम युद्धे त्वया सह ॥ ८०
सुराणां शरणस्यैव प्रेषितश्च हरेरहो।
देहि राज्यं च देवानामिति मे निश्चितं वचः ॥ ८१

युद्धं वा कुरु मत्सार्धं वाग्व्यये किं प्रयोजनम्।
इत्युक्त्वा शङ्करस्तत्र विरराम च नारद।
उत्तस्थौ शङ्खचूडश्च ह्यमात्यैः सह सत्वरम्।। ८२

*इति श्रीदेवीभागवते नवमस्कन्धे एकविंशोऽध्यायः*

—★—

## அத்தியாயம் - 22

சங்க சூடன் ஸ்ரீ கிருஷ்ணனை மனத்தில் தியானித்துக் கொண்டே விடியற்காலை பூப்படுக்கையிலிருந்து எழுந்து இரவில் தரித்த ஆடையை நீக்கி, மங்கள நீரில் நீராடி, தூய ஆடை உடுத்தித் திலகமிட்டு, காலை தெய்வக் கடன்களை செய்து இஷ்ட தெய்வத்தை வணங்கி, தயிர் நெய் தேன் பொரி என்ற மங்களப் பொருட்களைக் கண்டு, ரத்தினம் தங்கம் ஆடை முதலியவற்றை அந்தணர்களுக்கு வழங்கி, ரத்தினத்தை யாத்ராதானமாக ஓர் அந்தணருக்குத் தந்தான். ஏழைக்கு யானை குதிரை பணம் எல்லாம் அளித்தான். தன் புதல்வனை அரசனுக்கி, அஸுரர்களிடம் அவனையும் மனைவியைம் அரசையும் காக்கப் பணித்தான். தானும் போருக்கு ஆயத்தமாகக் கவசமணிந்து வில்லேந்திப் பெரும்படை உடன் வர மனத்தில் ஹரியைத் தியானித்து வெளியேறினன்.

ரத்தின விமானமேறி ஆசார்யர்களை வணங்கிப் புஷ்ப பத்திரா நதிக் கரையில் அக்ஷய வடத்தினருகே ஸித்தாசிரமமென்ற கபிலரின் தவக் கூடம் வந்தான். மேற்குக் கடலுக்கு கிழக்கில், மலயத்திற்கு மேற்கில், ஸ்ரீ சைலத்திற்கு வடக்கில் கந்தமாதனத்திற்குத் தெற்கில் புஷ்பபத்திரா நதி 5 யோசனை பரப்பும் 500 யோசனை நீளமும் ஓடுகிற நதி படிகம் போன்று தெளிந்த நீருள்ளது. லவண ஸமுத்ரத்தின் அன்புக்குரிய மனைவி. இமய மலையிலிருந்து வருகிற சராவதீ நதியுடன் இணைகிறது. கோமதியின் வலப்புறத்தில் மேற்குக் கடலில் கலக்கிறது. அங்கு சங்கசூடன் ஆலமரத்தடியில் அமர்ந்திருந்த சிவனைக் கண்டான். யோகாஸனத்தில் சின் முத்திரையுடன் படிக

ஒளியுடன் பிரும்ம தேஜஸுடன், திரிசூலமும் பட்டாக்கத்தியும் ஏந்தி புலித் தோலை ஆடையாக உடுத்தி பக்தருக்கு மரணபயம் நீக்குபவராக அமர்ந்திருந்தார். சாந்தராக, கௌரியின் மணாளராக, தவத்தின் பயனை அளிப்பவராக, எல்லாச் செல்வத்தையும் தருபவராக, எளிதில் மகிழ்பவராக, தெளிந்த முகத்துடன் பக்தனுக்கு அருள் புரியத் துடிப்பவராக, உலகின் மூல காரணமான விதையானவராக அவர் காட்சி அளித்தார். உலகின் மூல விதை அவரே. உலகைத் தாங்குபவர், உலகை ஒடுக்குபவர். நரகக் கடலைத் தாண்டுவிப்பவர். விமானத்திலிருந்து இறங்கி அவரை அஸுரன் வணங்கினான். அவரது இடது பக்கத்திலிருந்த பத்திர காளியையும் முன் நிற்கிற ஸ்கந்தரையும் வணங்கினான்.

சங்கரரும், காளியும், ஸ்கந்தரும் அவனுக்கு ஆசி வழங்கினர். நந்தி முதலானோர் எழுந்து வரவேற்றனர். சிறிது நேரம் அனைவருடனும் பேசி விட்டுச் சிவனருகே வந்த அஸுரனிடம் சிவன் சொன்னார். உலகைப் படைக்கிற பிரும்மாவிற்கு மரீசியும், மரீசிக்குக் கசியபரும் புதல்வர்கள். தக்ஷன் தனது பதிமூன்று பெண்களைக் கசியபருக்கு மனைவிகளாக்கினான். அவர்களில் தன் ஸௌபாக்யத்தில் கர்வம் மிக்க தனுவும் ஒருவள். அவளுக்கு நாற்பது புதல்வர்கள். அவர்களில் விப்ரசித்தி என்பவனுக்கு தம்பன் என்ற புதல்வன் பிறந்தான். அவன் விஷ்ணு பக்தன். புலன்களை அடக்கியவன். புஷ்கரத்தில் லக்ஷம் ஆண்டுகள் சுக்ராசார்யரிடமிருந்து பெற்ற ஸ்ரீ கிருஷ்ண மந்திரத்தை ஜபித்தான். அப்போது அவனிடம் நீ பிறந்தாய். அதற்குமுன் கோபர்களில் சிறந்த நீ ராதையிடம் சாபம் பெற்றதால் அஸுரனாகப் பிறந்தாய். விஷ்ணு பக்தர் எதனையும் நாடமாட்டார். விஷ்ணுவின் உலகின் வசிப்பதையோ, அருகாமையையோ அவரோடு கூடுவதையோ கூடப் பலனாக எதிர்பார்க்க மாட்டார்கள். பிரும்ம பதவியையோ அமரர் நிலையையோ துச்சமெனக் கருதுவர். இந்திரனாவதோ, மனுவாவதோ கூட விருப்பத்திற்குரியதல்ல. கிருஷ்ண பக்தனான உனக்குத் தேவர்களின் ராஜ்யம் எதற்கு? அதனை அவர்களிடம் திருப்பிக் கொடுப்பாய். நீ உன் ராஜ்யத்தில் சுகமாய் இருப்பாய். தேவர்கள் தம் ராஜ்யத்தில் சுகமாக இருக்கட்டும்.

நீங்கள் அனைவரும் கசியப வம்சத்தினர். ஜ்ஞாதிகளுக்குத் துரோகம் செய்வது பிரும்ம ஹத்யையை விடக் கொடிய பாபம். தன் உரிமைகளை இழப்பதைப் பெரிதாக நினைக்காதே! எவருக்கும் ஒரே நிலை தொடர்ந்திராது. பிரக்ருதி விளைவிக்கிற பிரளயத்தில் பிரும்மாவும் மறைய நேர்கிறது. மறுபடி அவர் தோன்றுகிறார். ஞானம் முதிர்வதும் நினைவு அகல்வதும் இயல்பே.

ஞானத்தைக் கொண்டு பிரும்மா படைக்கிறார். கிருத யுகத்தில் தர்மம் பூர்ணமாகத் துலங்குகிறது. த்ரேதாயுகத்தில் முக்கால் பங்கும், துவாபரத்தில் அரைப்பங்கும், கலியில் கால் பங்கும்தான் உள்ளது. கடைசியில் ஒரு கலை மட்டும் அமாவாசையன்று சந்திர கலைபோல் தேய்கிறது. சூரியன் கிரீஷ்ம ருதுவில் போல சிசிர ருதுவில் ஒளியும் சூடும் பெறுவதில்லை. காலையில் இருப்பது போல் நடுப்பகலிலும் மாலையிலும் இல்லை. உதிப்பவன் இளஞ் சூரியன், கடும் சூடுள்ளவன், மங்குபவன் என மாறுதல்கள் பல. ராகு பிடித்ததும் குறைவும் பின் நிறைவும் காணமுடிகிறது. பூர்ண சந்திரன் தினம் ஒரு கலையாக இழந்து மறுபடி கலைகளைப் பெற்றுப் பூர்ணனாகிறான். கிரகணத்திலும் அவ்வாறே சிறிது சிறிதாகத் தேய்ந்து மறுபடி பூர்ண நிலை பெறுகிறான். மஹாபலியும் இந்திரனாகி மறுபடி பதவியிழந்து ஸுதலத்தில் இப்போது உள்ளான்.

ஒரு காலத்தில் பூமி பயிர் நிறைந்து உலகின் ஆதாரமாகிப் பின் பிரளய நீரில் கரைந்து மறைகிறாள். பரம்பொருளின் ஸமநிலை பிரும்மாவிற்கு உண்டு. நான் மரணத்தை வென்றதால் மிருத்யுஞ்ஜயனானேன். பல பிரளயங்களைக் கண்டிருக்கிறேன். ப்ரக்ருதி, புருஷன், ஜீவன் எனப் பல நிலைகளில் காணப்படுகிற பரப் பொருளை உணர்ந்து அவரது நாமத்தையும் குணத்தையும் பாடுபவன் மரணத்தை வெல்கிறான். பிரும்மாவைப் படைப்பவராக, விஷ்ணுவைக் காப்பவராக என்னை ஒடுக்குபவனாக, உலகைப் பயத்தினுள் ஆட்படுவராக ஆக்கியவர் அந்தப் பரமபுருஷரே. நான் எப்போதும் அவரது குணங்களைப் பாடி அதனால் ஏற்பட்ட ஜ்ஞானத்தால் பயமின்றி மரணத்தை வென்ற மிருத்யுஞ்ஜயனானேன். கருடனிடம் பாம்பு நடுங்குவது போல் யமன் தனக்கு மரணம் நேருமோ என நடுங்குகிறான் என்று சிவன் விளக்கினார்.

அரசன் சங்கசூடன் சிவனது உபதேசத்தைப் பாராட்டி வினயத்துடன் தன் கருத்தைத் தெரிவித்தான். தேவரே ! நீர் கூறியதற்கு மாறுபட்ட கருத்து எனக்கு இல்லை. ஆனாலும் உண்மை நிலை பற்றி என் விண்ணப்பத்தைக் கேட்பீர். ஜ்ஞாதிக்குத் துரோகம் விளைப்பது பெரும் பாபம் என்றீர். ஆனால் பலியின் முழு உரிமைப் பொருளையும் பிடுங்கிக் கொண்டு அவனைப் பாதாளத்திற்கு விரட்டியது ஏன்? நான் மேலுலகத்து ஐச்வர்யமனைத்தையும் பிடுங்கிக் கொண்டேன். பாதாளத்திலிருந்து பலியை மீட்க விஷ்ணுவால் இயலவில்லை. ஹிரண்யாக்ஷனும் அவனது ஸஹோதரனும் தேவர்களால் அழிக்கப் பெற்றனர். சும்பன் முதலான அசுரர்கள் அழிக்கப்பட்டார்களே ! முன் பாற்கடலைக் கடைந்தெடுத்த அமுதம் தேவர்களால் மட்டும் பருகப் பெற்றது. உழைத்துக் கஷ்டப்பட்டவர்கள் நாங்கள். பலனை அனுபவித்தவர் அவர்கள். பிருகிருதி தேவிக்கும் பரமாத்மாவிற்கும் இவ்வுலகம் விளையாட்டுத்திடல். எவருக்கு எதனைத் தருகிறாரோ அவருக்கு அது உரிமை. ஏதோ ஒரு காரணம் பற்றி தேவதானவர்களிடையே போரும். தோல்வியும், வெற்றியும் மாறி மாறி வரும். எங்களிடையே விரோதமோ, ஒற்றுமையோ பயனற்றது. எங்களிருவரிடமும் ஸமமான தொடர்புள்ள ஈசன் எங்களுடன் போரிடவருவது வெட்கப்படத் தக்கதே. வெற்றியில் புகழும் தோல்வியில் நஷ்டமும் நேரும்.'' இவ்வாறு சங்கசூடன் கூறியதைக் கேட்ட சிவன் சிரித்துக் கொண்டே சொன்னார்.

''நீங்கள் பிரும்மாவின் வழித் தோன்றல்கள். உங்களுடன் போரிடுவதில் எனக்கு வெட்கமோ, உம் தோல்வியில் புகழோ இல்லை. முதலில் ஹரி மதுகைடபர்களுடன் போரிட்டார். ஹிரண்யகசிபு ஹிரண்யாக்ஷனுடன் பின் போரிட்டார். திரிபுரனுடன் நான் போரிட்டேன். ஸர்வேச்வரியான பிருக்ருதி தேவி சும்பன் முதலானவருடன் போரிட்டாள். கிருஷ்ணனின் பார்ஷதர்களில் நீ சிறந்தவன். இதற்குமுன் அழிந்த அசுரர்களில் உனக்கு ஈடானவர் எவருமில்லை. உன்னுடன் போரிடுவதில் எனக்கு வெட்கமேது? தேவர்களுக்குச் சரணம் தந்த ஹரி என்னை அனுப்பினார். தேவர்களிடம் அவர்களது ராஜ்யத்தைத் திருப்பித்

தருவாய் என்பது என் தீர்மான வாக்கு. என்னிடம் போரிடுவாய். வீண் பேச்சு எதற்கு? இவ்வாறு சிவன் சொன்னதும் சங்கசூடன் தன் அமைச்சர்களுடன் போரிட வேகமாக வந்தான்.

—★—

## द्वाविंशोऽध्यायः

श्री नारायण उवाच—

शिवं प्रणम्य शिरसा दानवेन्द्रः प्रतापवान्।
समारुरोह यानं च सहामात्यैः स सत्वरः ॥ १
शिवः स्वसैन्यं देवांश्च प्रेरयामास सत्वरम्।
दानवेन्द्रः ससैन्यश्च युद्धारम्भे बभूव ह ॥ २
स्वयं महेन्द्रो युयुधे सार्धं च वृषपर्वणा।
भास्करो युयुधे विप्रचित्तिना सह सत्वरः ॥ ३
दम्भेन सह चन्द्रश्च चकार परमं रणम्।
कालस्वरेण कालश्च गोकर्णेन हुताशनः ॥ ४
कुबेरः कालकेयेन विश्वकर्मा मयेन च।
भयङ्करेण मृत्युश्च संहारेण यमस्तथा ॥ ५
विकङ्कणेन वरुणश्चञ्चलेन समीरणः।
बुधश्च घृतपृष्ठेन रक्ताक्षेण शनैश्चरः ॥ ६
जयन्तो रत्नसारेण विसवो वर्चसां गणैः।
अश्विनौ च दीप्तिमता धूम्रेण नलकूबरः ॥ ७
धुरन्धरेण धर्मश्च उषाक्षेण च मङ्गलः।
शोभाकरेण वै भानुः पिठरेण च मन्मथः ॥ ८
गोधामुखेन चूर्णेन खड्गेन च ध्वजेन च।
काञ्चीमुखेन पिण्डेन धूम्रेण सह नन्दिना ॥ ९

विश्वेन च पलाशेनादित्याद्या युयुधुः परे।
एकादश च रुद्रा वै एकादशभयङ्करैः ॥ १०
महामारी च युयुधे चोग्रचण्डादिभिः सह।
नन्दीश्वरादयः सर्वे दानवानां गणैः सह॥ ११
युयुधुश्च महायुद्धे प्रलयेऽपि भयङ्करे।
वटमूले च शम्भुश्च तस्थौ काल्या सुतेन च॥ १२
सर्वे च युयुधुः सैन्यसमूहाः सततं मुने।
रत्नसिंहासने रम्ये कोटिभिर्दानवैः सह॥ १३
उवास शङ्खचूडश्च रत्नभूषणभूषितः।
शङ्करस्य च ये योधा दानवैश्च पराजिताः ॥ १४
देवाश्च दुद्रुवुः सर्वे भीताश्च क्षतविग्रहाः।
चकार कोपं स्कन्दश्च देवेभ्यश्चाभयं ददौ॥ १५
बलं च स्वगणानां च वर्धयामास तेजसा।
सोऽयमेकश्च युयुधे दानवानां गणैः सह॥ १६
अक्षौहिणीनां शतकं समरे च जघान सः।
असुरान्पातयामास काली कमललोचना॥ १७
पपौ रक्तं दानवानामतिक्रुद्धा ततः परम्।
दशलक्षगजेन्द्राणां शतलक्षं च कोटिशः॥ १८
समादायैकहस्तेन मुखे चिक्षेप लीलया।
कबन्धानां सहस्रं च ननर्त समरे मुने॥ १९
स्कन्दस्य शरजालेन दानवाः क्षतविग्रहाः।
भीताश्च दुद्रुवुः सर्वे महारणपराक्रमाः॥ २०

वृषपर्वा विप्रचित्तिर्दम्भश्चापि विकङ्कणः ।
स्कन्देन सार्धं युयुधुस्ते सर्वे विक्रमेण च ।। २१
महामारी च युयुधे न बभूव च पराङ्मुखी ।
बभूवुस्ते च संक्षुब्धाः स्कन्दस्य शक्तिपीडिताः ।। २२
न दुद्रुवुर्भयात्स्वर्गे पुष्पवृष्टिर्बभूव ह ।
स्कन्दस्य समरं दृष्ट्वा महारुद्रसमुल्बणम् ।। २३
दानवानां क्षयकरं यथा प्राकृतिको लयः ।
राजा विमानमारुह्य चकार बाणवर्षणम् ।। २४
नृपस्य शरवृष्टिश्च घनस्य वर्षणं यथा ।
महाघोरान्धकारश्च वह्न्युत्थानं बभूव च ।। २५
देवाः प्रदुद्रवुः सर्वेऽप्यन्ये नन्दीश्वरादयः ।
एक एव कार्त्तिकेयस्तस्थौ समरमूर्धनि ।। २६
पर्वतानां च सर्पाणां शिलानां शाखिनां तथा ।
नृपश्चकार वृष्टिं च दुर्वारां च भयङ्करीम् ।। २७
नृपस्य शरवृष्ट्या च प्रहितः शिवनन्दन ।
नीहारेण च सान्द्रेण प्रहितो भास्करो यथा ।। २८
धनुश्चिच्छेद स्कन्दस्य दुर्वहं च भयङ्करः ।
बभंज च रथं दिव्यं चिच्छेद रथपीठकान् ।। २९
मयूरं जर्जरीभूतं दिव्यास्त्रेण चकार सः ।
शक्तिं चिक्षेप सूर्याभां तस्य वक्षसि घातिनीम् ।। ३०
क्षणं मूर्छां च संप्राप बभूव चेतनः पुनः ।
गृहीत्वा तद्धनुर्दिव्यं यद्दत्तं विष्णुना पुरा ।। ३१

रत्नेन्द्रसारनिर्माणयानमारुह्य कार्तिकः ।
शस्त्रास्त्रं गृहीत्वा च चकार रणमुल्वणम् ।। ३२
सर्पांश्च पर्वतांश्चैवं वृक्षांश्च प्रस्तरांस्तथा ।
सर्वांश्चिच्छेद कोपेन दिव्यास्त्रेण शिवात्मजः ।। ३३
वह्निं निर्वापयामास पार्जन्येन प्रतापवान् ।
रथं धनुश्च चिच्छेद शङ्खचूडस्य लीलया ।। ३४
सवाहं सारथिं चैव किरीटं मुकुटोज्ज्वलम् ।
चिक्षेप शक्तिं शुक्लाभां दानवेन्द्रस्य वक्षसि ।। ३५
मूर्च्छां सम्प्राप्य राजा च चेतनश्च बभूव ह ।
आरुरोह यानमन्यद्धनुर्जग्राह सत्वरः ।। ३६
चकार शरजालं च मायया मायिनां वरः ।
गुहं चच्छाद समरे शरजालेन नारद ।। ३७
जग्राह शक्तिमव्यग्रां शतसूर्यसमप्रभाम् ।
प्रलयाग्निशिखरूपां विष्णोश्च तेजसा वृताम् ।। ३८
चिक्षेप तां च कोपेन महावेगेन कार्त्तिके ।
पपात शक्तिस्तद्गात्रे वह्निराशिरिवोज्ज्वला ।। ३९
मूर्च्छां सम्प्राप शक्त्या च कार्त्तिकेयो महाबलः ।
काली गृहीत्वा तं क्रोडे निनाय शिवसन्निधौ ।। ४०
शिवस्तं चापि ज्ञानेन जीवयामास लीलया ।
ददौ बलमनन्तं च समुत्तस्थौ प्रतापवान् ।। ४१
काली जगाम समरं रक्षितुं कार्त्तिकस्य या ।
वीरास्तामनु जग्मुश्च ते नन्दीश्वरादयः ।। ४२

सर्वे देवाश्च गन्धर्वा यक्षराक्षसकिन्नराः ।
वाद्यभाण्डाश्च बहुशः शतशो मधुवाहकाः ।। ४३
सा च गत्वाऽथ संग्रामं सिंहनादं चकार च।
देव्याश्च सिंहनादेन प्रापुर्मूर्च्छां च दानवाः ।। ४४
अट्टाट्टहासमशिवं चकार च पुनः पुनः ।
दृष्ट्वा पपौ च माध्वीकं ननर्त रणमूर्धनि ।। ४५
उग्रदंष्ट्रा चोग्रदण्डा कोटकी च पपौ मधु।
योगिनीडाकिनीनां च गणाः सुरगणादयः।। ४६
दृष्ट्वा कालीं शङ्खचूडः शीघ्रमाजौ समाययौ।
दानवाश्च भयं प्रापुः राजा तेभ्योऽभयं ददौ ।। ४७
काली चिक्षेप वह्निं च प्रलयाग्निशिखोपमम्।
राजा निर्वापयामास पार्जन्येन च लीलया ।। ४८
चिक्षेप वारुणं सा च तीव्रं च महदद्भुतम्।
गान्धर्वेण च चिच्छेद दानवेन्द्रश्च लीलया ।। ४९
माहेश्वरं प्रचिक्षेप काली वह्निशिखोपमम्।
राजा जघान तं शीघ्रं वैष्णवेन च लीलया ।। ५०
नारायणास्त्रं सा देवी चिक्षेप मन्त्रपूर्वकम्।
राजा ननाम तद्दृष्ट्वा चावरुह्य रथादसौ ।। ५१
ऊर्ध्वं जगाम तच्चास्त्रं प्रलयाग्निशिखोपमम्।
पपात शङ्खचूडश्च भक्त्या तं दण्डवद्भुवि ।। ५२
ब्रह्मास्त्रं सा च चिक्षेप यत्नतो मन्त्रपूर्वकम्।
ब्रह्मास्त्रेण महाराजो निर्वापं च चकार सः ।। ५३

तथा चिक्षेप दिव्यास्त्रं सा देवी मन्त्रपूर्वकम्।
राजा दिव्यास्त्रजालेन तन्निर्वाणं चकार च ॥ ५४
देवी चिक्षेप शक्तिं च यत्नतो योजनायताम्।
राजा दिव्यास्त्रजालेन शतखण्डां चकार ह ॥ ५५
जग्राह मन्त्रपूतं च देवी पाशुपतं रुषा।
निक्षेपणं निरोद्धुं च वाग्बभूवाशरीरिणी ॥ ५६
मृत्युः पाशुपते नास्ति नृपस्य च महात्मनः।
यावदस्ति च मन्त्रस्य कवचं च हरेरिति ॥ ५७
यावत्सतीत्वमस्त्येव सत्याश्च नृपयोषितः।
तावदस्य जरा मृत्युर्नास्तीति ब्रह्मणो वचः ॥ ५८
इत्याकर्ण्य भद्रकाली न तच्चिक्षेप शस्त्रकम्।
शतलक्षं दानवानां जग्रास लीलया क्षुधा ॥ ५९
ग्रस्तुं जगाम वेगेन शङ्खचूडं भयङ्करी।
दिव्यास्त्रेण सुतीक्ष्णेन वारयामास दानवः ॥ ६०
खड्गं चिक्षेप सा देवी ग्रीष्मसूर्योपमं यथा।
दिव्यास्त्रेण दानवेन्द्रः शतखण्डं चकार सः ॥ ६१
पुनर्ग्रस्तुं महादेवी वेगेन च जगाम तम्।
सर्वसिद्धेश्वरः श्रीमान्ववृधे दानवेश्वरः ॥ ६२
वेगेन मुष्टिना काली कोपयुक्ता भयङ्करी।
बभंज च रथं तस्य जघान सारथिं सती ॥ ६३
सा च शूलं च चिक्षेप प्रलयाग्निशिखोपमम्।
वामहस्तेन जग्राह शङ्खचूडः स्वलीलया ॥ ६४

मुष्ट्या जघान तं देवी महाकोपेन वेगतः ।
बभ्राम च तया दैत्यः क्षणं मूर्च्छामवाप च ।। ६५
क्षणेन चेतनां प्राप्य समुत्तस्थौ प्रतापवान्।
न चकार बाहुयुद्धं देव्या सह ननाम ताम्।। ६६
देव्याश्चास्त्रं च चिच्छेद जग्राह च स्वतेजसा।
नास्त्रं चिक्षेप तां भक्तो मातृभक्त्या तु वैष्णवः ।। ६७
गृहीत्वा दानवं देवी भ्रामयित्वा पुनः पुनः ।
ऊर्ध्वं च प्रापयामास महावेगेन कोपिता ।। ६८
ऊर्ध्वात्पपात वेगेन शङ्खचूडः प्रतापवान्।
निपत्य च समुत्तस्थौ प्रणम्य भद्रकालिकाम्।। ६९
रत्नेन्द्रसारनिर्माणं विमानं सुमनोहरम्।
आरुरोह हर्षयुक्तो न विश्रान्तो महारणे ।। ७०
दानवानां च क्षतजं सा देवी च पपौ क्षुधा।
पीत्वा भुक्त्वा भद्रकाली जगाम शङ्करान्तिकम्।। ७१
उवाच रणवृत्तातं पौर्वापर्यं यथाक्रमम्।
श्रुत्वा जहास शम्भुश्च दानवानां विनाशनम्।। ७२
लक्षं च दानवेन्द्राणामवशिष्टं रणेऽधुना।
भुञ्जंत्या निर्गतं वक्त्रात्तदन्यं भुक्तमीश्वर ।। ७३
संग्रामे दानवेन्द्रं च हन्तुं पाशुपतेन वै।
अवध्यस्तव राजेति वाग्बभूवाशरीरिणी ।। ७४
राजेन्द्रश्च महाज्ञानी महाबलपराक्रमः ।
न च चिक्षेप मय्यस्त्रं चिच्छेद मम सायकम्।। ७५

*इति श्रीदेवीभागवते नवमस्कन्धे द्वाविंशोध्यायः*

—★—

## அத்தியாயம் - 22

நாரதரிடம் நாராயணர் கூறுகிறார். அசுரர்களில் சிறந்த சங்கசூடன் சிவனைத் தலையால் வணங்கித் தன் அமைச்சர்களுடன் ரதமேறினான். சிவன் உடன் தன் படையைப் போரிட ஏவினார். இந்திரன் விருஷபர்வாவுடனும் ஸூர்யன் விப்ரசித்தியுடனும் சந்திரன் தம்பனுடனும், யமன் கால ஸ்வரனுடனுமென அவரவர் தனித் தனியே தக்க வீரருடன் போரிட்டனர்.

ஆலமரத்தடியில் சிவன் காளியுடனும் ஸ்கந்தருடனும் தங்கியிருந்தார். சங்க சூடனும் தன் மந்த்ரிகளுடன் போரைக் கண்காணித்தான். சிவனது படை வீரர்கள் அசுரப் படையால் தோற்கப் பெறுவதைக்கண்ட ஸ்கந்தர் தேவர்களுக்கு அபயமளித்துத்தானே போரிடத் தொடங்கியதும் ஸ்கந்தரின் சக்திவேலால் அடிபட்ட அசுரர்கள் பயந்தோடினர். உடன் சங்கசூடன் விமானத்திலேறி வானிலிருந்து அம்பு மழைபெய்ய யுத்த பூமி இருண்டது. தீ எங்கும் பரவியது. தேவர்கள் பயந்து ஓடினர். ஸ்கந்தர் மட்டும் போரரங்கின் முன் நின்றார்.

சங்கசூடன் மலைகளையும் பாம்புகளையும் பாறைகளையும் மரங்களையும் அம்பாக வர்ஷித்தான். ஸ்கந்தனின் வில்லை ஒடித்துத் தேரை உடைத்து மயிலை விலவிலக்கச் செய்தான். தன் சக்தி ஆயுதத்தை கந்தன் மார்பின் மீது வீசினான். சிவனின் மைந்தன் மார்பில் அடிப்பட்டுச் சிறிது நேரம் கலங்கி நின்றான். திவ்ய அஸ்த்ரங்களால் எதிரியின் பாண மழையை அழித்து நெருப்பை அணைத்து சங்கசூடனின் வில்லை ஒடித்தான். தேரை உடைத்தான். சக்தியால் மார்பில் அடித்தான். கணநேரம் கலங்கிநின்ற அஸுரன் விஷ்ணுவின் ஆற்றல் கொண்ட தன் சக்தியால் கந்தனை அடித்ததும் கந்தன் மயக்கமுற்றான்.

உடன் காளி கந்தனை மடியில் ஏந்தி சிவனிடம் கொணர, சிவன் நினைவூட்டிக் கந்தனுக்கு வலிவூட்டினார். காளி போருக்கு நந்தி முதலானோருடன் சென்றாள். அவளது கர்ஜனைக் கேட்ட அசுரர்கள் மயங்கி விழுந்தனர். மதுபானம் செய்து அட்ட ஹாஸத்துடன் திவ்யாஸ்திரங்களைச் சங்கசூடன் மீது பொழிய அவனும் மாற்று திவ்யாஸ்திரங்களால் அவற்றை அழித்தான்.

தேவியால் ப்ரயோகிக்கப் பெற்ற அஸ்திரங்கள் அனைத்தும் அஸுரனால் பயனற்றதாக்கப் பெற்றன. உடன் காளி பாசுபதாஸ்திரத்தை மந்திரித்து அஸுரன் மீது ஏவமுற்பட்டாள். அப்போது அசரீரி வாக்கு எழுந்தது. ''பாசுபதாஸ்த்ரத்தால் அஸுரனை அழிக்க இயலாது. அவனது உடலில் ஹரியின் மந்த்ரத்தால் சக்திபெற்ற கவசம் உள்ளது. அவனது மனைவியின் கற்பும் அவனைக் காக்கிறது. அவளது கற்பு அவனிடம் முதுமையும் மரணமும் அணுகாமல் பாதுகாக்கிறது'' என. இதனைக் கேட்ட காளி பாசுபதாஸ்த்ரத்தை அசுரன் மீது எய்யவில்லை. தன் அகன்றவாயால் லக்ஷக் கணக்கில் அசுரர்களை விழுங்கினாள். அதனை அஸுரன் தன் அஸ்திரத்தால் தடுத்தான். காளியின் கத்தியையும் தன் அஸ்திரத்தால் தூளாக்கினான். காளியின் கோபத்தைக் கண்டதும் அஸுரன் வான மளாவ வளர்ந்தான்.

காளி கோபத்துடன் முஷ்டியால் அவன் ரதத்தையும், ஸாரதியையும் தாக்கி, சூலத்தை அஸுரன் மீது எறிந்தாள். சங்கசூடன் அதனை இடது கையால் பிடித்துவிட்டான். காளி கோபத்தால் எழுந்து அவன் மார்பில் குத்த, சிறிது அதனால் கலங்கிய அஸுரன் மீண்டும் எழுந்து காளியின் மீது பாய்ந்தான். இருவருக்கிடையே நடந்த கைகலப்பில் விழுந்தெழுந்த அசுரன் காளியை வணங்கி மீண்டும் ரதமேறினான். அவனிடம் களைப்பில்லை. அஸுரன் ரத்தத்தைப் பருகிய காளி சிவனிடம் சென்றாள். (71)

சிவனிடம் போரின் நிலையை விளக்கிய காளி ''தற்போது லக்ஷம் வீரர்களே அஸுரப் படையில் உள்ளனர். மற்ற வீரர்களைக் கொன்று அவர்களின் இரத்தத்தைக் குடித்து விட்டேன். அசரீரி வாக்கை ஒட்டி அவனைக் கொல்ல பாசுபதாஸ்த்ரத்தை நான் ஏவவில்லை. அஸுரராஜனும் பெரும் ஜ்ஞானீ. பெரும் பராக்ரம முள்ளவன். என்மீது தன் அஸ்த்ரத்தை ஏவாமல் என் அஸ்த்ரத்தை மட்டும் சிதைத்தான்'' என்றாள்.

—★—

## त्रयोविंशोऽध्यायः - २३

श्री नारायण उवाच—

शिवस्तत्त्वं समाकर्ण्य तत्त्वज्ञानविशारदः ।
ययौ स्वयं च समरे स्वगणैः सह नारद ॥ १
शङ्खचूडः शिवं दृष्ट्वा विमानादवरुह्य च ।
ननाम परया भक्त्या शिरसा दण्डवद्भुवि ॥ २
तं प्रणम्य वेगेन विमानमारुरोह सः ।
तूर्णं चकार सन्नाहं धनुर्जग्राह दुर्वहम् ॥ ३
शिवदानवयोर्युद्धं पूर्णमब्दशतं पुरा ।
न बभूवतुरन्योन्यं ब्रह्मञ्जयपराजयौ ॥ ४
न्यस्तशस्त्रश्च भगवान्न्यस्तशस्त्रश्च दानवः ।
रथस्थः शङ्खचूडश्च वृषस्थो वृषभध्वजः ॥ ५
दानवानां च शतकमुद्धृतं च बभूव ह ।
रणे ये ये मृताः शंभुर्जीवयामास तान्प्रभुः ॥ ६
एतस्मिन्नन्तरे वृद्धब्राह्मणः परमातुरः ।
आगत्य च रणस्थानं उवाच दानवेश्वरम् ॥ ७

वृद्धब्राह्मणः—

देहि भिक्षां च राजेन्द्र मह्यं विप्राय साम्प्रतम् ।
त्वं सर्वसंपदां दाता यन्मे मनसि वाञ्छितम् ॥ ८
निरीहाय च वृद्धाय तृषिताय च साम्प्रतम् ।
पश्चात्त्वां कथयिष्यामि पुरः सत्यं च कुर्विति ॥ ९
ओमित्युवाच राजेन्द्रः प्रसन्नवदनेक्षणः ।
कवचार्थी जनश्चाहमित्युवाचातिमायया ॥ १०

तच्छ्रुत्वा कवचं दिव्यं जग्राह हरिरेव च।
शङ्खचूडस्य रूपेण जगाम तुलसीं प्रति॥ ११
गत्वा तस्यां मायया च वीर्याधानं चकार च।
अथ शम्भुर्हरेः शूलं जग्राह दानवं प्रति॥ १२
ग्रीष्ममध्याह्नमार्तण्ड प्रलयाग्निशिखोपमम्।
दुर्निवार्यं च दुर्धर्षं अव्यर्थं वैरिघातकम्॥ १३
तेजसा चक्रतुल्यं च सर्वशस्त्रास्त्रसारकम्।
शिवकेशवयोरन्यदुर्वहं च भयङ्करम्॥ १४
धनुःसहस्रं दैर्घ्येण प्रस्थेन शतहस्तकम्।
सजीवं ब्रह्मरूपं च नित्यरूपमनिर्दिशम्॥ १५
संहर्तुं सर्वब्रह्माण्डमलं यत्स्वीयलीलया।
चिक्षेप तोलनं कृत्वा शङ्खचूडे च नारद॥ १६
राजा चापं परित्यज्य श्रीकृष्णचरणाम्बुजम्।
ध्याने चकार भक्त्या च कृत्वा योगासनं धिया॥ १७
शूलं च भ्रमणं कृत्वा पपात दानवोपरि।
चकार भस्मसात्तं च सरथं चाऽथ लीलया॥ १८
राजा धृत्वा दिव्यरूपं किशोरं गोपवेषकम्।
द्विभुजं मुरलीहस्तं रत्नभूषणभूषितम्॥ १९
रत्नेन्द्रसारनिर्माणं वेष्टितं गोपकोटिभिः।
गोलोकादागतं यानमारुरोह पुरं ययौ॥ २०
गत्वा ननाम शिरसा स राधाकृष्णयोर्मुने।
भक्त्या च चरणाम्भोजं रासे वृन्दावने वने॥ २१

सुदामानं च तौ दृष्ट्वा प्रसन्नवदनेक्षणौ ।
क्रोडे चक्रतुरत्यन्तं प्रेम्णाऽतिपरिसंयुतौ ।। २२
अथ शूलं च वेगेन प्रययौ तं च सादरम् ।।
अस्थिभिः शङ्खचूडस्य शङ्खजातिर्बभूव ह ।। २३
नानाप्रकाररूपेण शश्वत्पूता सुरार्चने ।
प्रशस्तं शङ्खतोयं च देवानां प्रीतिदं परम् ।। २४
तीर्थतोय स्वरूपं च पवित्रं शम्भुना विना ।
शङ्खशब्दो भवेद्यत्र तत्र लक्ष्मीः सुसंस्थिरा ।। २५
स स्नातः सर्वतीर्थेषु यः स्नातः शङ्खवारिणा ।
शङ्खो हरेरधिष्ठानं यत्र शङ्खस्ततो हरिः ।। २६
तत्रैव वसते लक्ष्मीर्दूरीभूतममङ्गलम् ।
स्त्रीणां च शङ्खध्वनिभिः शूद्राणां च विशेषतः ।। २७
भीता रुष्टा याति लक्ष्मीस्तत्स्थलादन्यदेशतः ।
शिवोऽपि दानवं हत्वा शिवलोकं जगाम ह ।। २८
प्रहृष्टो वृषभारूढः स्वगणैश्च समावृतः ।
सुराः स्वविषयं प्रापुः परमानन्दसंयुताः ।। २९
नेदुर्दुन्दुभयः स्वर्गे जगुर्गन्धर्वकिन्नराः ।
बभूव पुष्पवृष्टिश्च शिवस्योपरि सन्ततम् ।। ३०
प्रशशंसुः सुरास्तं च मुनीन्द्रप्रवरादयः ।

*इति श्री देवीभागवते नवमस्कन्धे त्रयोविंशोऽध्यायः ।।*

—★—

## அத்தியாயம் 23

உண்மை அறிவதில் நிபுணரான சிவன் போரின் நிலையைக் கேட்டுத் தானே தன் கணங்களுடன் போரிடச் சென்றார். சிவனைக் கண்ட சங்க சூடன் விமானத்திலிருந்து இறங்கி பக்தியுடன் சிவனை வணங்கிப் பின் விமானத்தில் ஏறினான். போருக்கு முனைந்து வில்லேந்தினான். சிவனுக்கும் அசுரனுக்கும் இடையே. நூறாண்டுகள் போர் நிகழ்ந்தது. எவருக்கும் வெற்றியோ தோல்வியோ இல்லை. சிவன் தன் ஆயுதங்களைக் கீழே வைக்க, அஸுரனும் தன் ஆயுதங்களைக் கீழே வைத்தான். ரதத்தில் அசுரனும் விருஷபத்தின் மீது சிவனும் அமர்ந்திருந்தனர். போரில் அழிந்த வீரர்களைச் சிவன் மீண்டும் உயிர் பெற்றெழச் செய்தார்.

ஒரு கிழ அந்தணன் சங்கசூடனிடம் வந்து பிக்ஷை கேட்டான். ''குறிக்கோள் எதுவுமின்றி இந்த கிழ அந்தணன் நாடி வந்த பொருள் எது என்பதைப் பின் சொல்வேன். முதலில் தருவதாக ஸத்தியம் செய்து கொடு'' என்றார். அரசன் அதனை முகமலர்ந்து ஏற்றான். உன் கவசத்தை நாடி வந்தேன் என்ற அந்தணனிடம் தான் அணிந்திருந்த கவசத்தை அஸுரன் கழற்றித் தந்தான். ஹரி அதனை ஏற்றார். சங்க சூடன் வேடத்தில் துளஸியிடம் சென்று அவளை ஏமாற்றி உடலுறவு கொண்டார். சிவன் சூலமேந்தினார். சிவனோ கேசவனோ அதை ஏந்த முடியும். நீளத்தில் ஆயிரம் வில்லடியளவும் குறுக்கில் நூறு முழமும் விரிந்தது. உலகையே அழிக்க வல்லது. அதனைச் சுழற்றி அஸுரன் மீது சிவன் எறிந்தார். ராஜா உடன் வில்லை எறிந்து விட்டு ஸ்ரீ க்ருஷ்ணனின் திருவடித் தாமரைகளைத் தியானித்து யோகாஸனத்தில் அமர்ந்தான். சூலம் அவன் மீது தாக்கி அவனைத் தேருடன் பொசுக்கியது.

அஸுரன் உடன் யுவனான கோபனானான். இரு கைகளுள்ளவனாகி குழல் ஏந்தி, கோடிக் கணக்கான கோபர்கள் சூழ கோலோகத்திலிந்து தனக்காக வந்த விமானமேறி கோலோகத்தில் ராதா-கிருஷ்ணர்களின் திருவடித் தாமரைகளில் வணங்கி எழுந்தான். ஸுதாமாவை திவ்ய தம்பதியர் அன்புடன் மடியில் அமர்த்தினர்.

சங்க சூடன் மீது தாக்கிய சூலம் நாராயணனை அடைந்தது. அஸுரனின் எலும்பு சங்கு எனப்படும் எலும்புக் கூடாகியது. தேவர்களின் வழி பாட்டில் நீர் நிறைந்த அந்தச் சங்கு முதலிடம் பெற்றது. சிவனைத் தவிர மற்றவர் வழிபாட்டில் பயன்பட்டது. சங்கின் ஒலியில் லக்ஷ்மீ வசிக்கிருள். சங்க நீரில் நீராடியவர் எல்லா புண்ய தீர்த்தங்களிலும் நீராடியவராவார். சங்கு ஹரியின் ஆதாரம். சங்குள்ளவிடத்தில் ஹரி இருப்பார். லக்ஷ்மியும் அங்குள்ளதால் அமங்களமனைத்தும் அங்கிருந்து அகலும். சிவனும் சிவ லோகத்திற்குத் தன் கணங்களுடன் சென்ருர். தேவர்களும் தம் தம் இடத்தை அடைந்து மகிழ்ந்தனர். சிவன் மீது கந்தர்வரும் கின்னரரும் பூமாரி பொழிந்து துந்துபி வாசித்தனர். தேவரும் முனிவரும் சிவனைப் பாராட்டினர்.

—★—

## चतुर्विंशोध्यायः

नारद उवाच—

नारायणश्च भगवान्वीर्याधानं चकार ह।

तुलस्यां केन रूपेण तन्मे व्याख्यातुमर्हसि॥ १

श्री नारायण उवाच—

नारायणश्च भगवान्देवानां साधनेषु च।

शङ्खचूडस्य कवचं गृहीत्वा विष्णुमायया॥ २

पुनर्विधाय तद्रूपं जगाम तत्सतीगृहम्।

पातिव्रत्यस्य नाशेन शङ्खचूडजिघांसया॥ ३

दुन्दुभिं वादयामास तुलसीद्वारसन्निधौ।

जयशब्दं च तद्द्वारे बोधयामास सुन्दरीम्॥ ४

तत् श्रुत्वा च रवं साध्वी परमानन्दसंयुता।

राजमार्गे गवाक्षेण ददर्श परमादरात्॥ ५

ब्राह्मणेभ्यो धनं दत्त्वा कारयामास मङ्गलम्।
बन्दिभ्यो भिक्षुकेभ्यश्च वाचिभ्यश्च धनं ददौ ।। ६
अवरुह्य रथाद्देवो देव्याश्च भवनं ययौ।
अमूल्यरत्ननिर्माणं सुन्दरं सुमनोहरम्।। ७
दृष्ट्वा च पु तः कान्तं सा तं कान्ता मुदाऽन्विता।
तत्पादं क्षालयामास ननाम च रुरोद च ।। ८
रत्नसिंहासने रम्ये वासयामास कामुकी।
ताम्बूलं च ददौ तस्मै कर्पूरादिसुवासितम्।। ९
अद्य मे सफलं जन्म जीवनं च बभूव ह।
रणे गतं च प्राणेशं पश्यन्त्याश्च पुनर्गृहे ।। १०
सस्मिता सकटाक्षं च सकामा पुलकाङ्किता।
पप्रच्छ रणवृत्तान्तं कान्तं मधुरया गिरा।। ११

तुलस्युवाच—

असंख्यविश्वसंहर्त्रा सार्धमाजौ तव प्रभो।
कथं बभूव विजयस्तन्मे ब्रूहि कृपानिधे।। १२
तुलसीवचनं श्रुत्वा प्रहस्य कमलापतिः।
शङ्खचूडस्य रूपेण तामुवाचामृतं वचः ।। १३

श्री भगवानुवाच—

आवयोः समरः कान्ते पूर्णमब्दं बभूव ह।
नाशो बभूव सर्वेषां दानवानां च कामिनि ।। १४
प्रीतिं च कारयामास ब्रह्मा च स्वयमावयोः ।
देवानामधिकारश्च प्रदत्तो ब्रह्मणाऽज्ञया ।। १५

मयाऽऽगतं स्वभवनं शिवलोकं शिवो गतः ।
इत्युक्त्वा जगतां नाथः शयनं च चकार ह ।। १६
रेमे रमापतिस्तत्र रामया सह नारद ।
सा साध्वी सुखसंभोगादाकर्षणव्यतिक्रमात् ।। १७
सर्वं वितर्कयामास कस्त्वमेवेत्युवाच सा ।

तुलस्युवाच—

को वा त्वं वद मायेश भुक्ताऽहं मायया त्वया ।। १८
दूरीकृतं मत्सतीत्वं यदतस्त्वां शपामि हे ।
तुलसीवचनं श्रुत्वा हरिः शापभयेन च ।। १९
दधार लीलया ब्रह्मन्सुमूर्तिं सुमनोहरम् ।
ददर्श पुरतो देवी देवदेवं सनातनम् ।। २०
नवीननीरदश्यामं शरत्पङ्कजलोचनम् ।
कोटिकन्दर्पलीलाभं रत्नभूषणभूषितम् ।। २१
ईषद्धास्यप्रसन्नास्यं शोभितं पीतवाससम् ।
तं दृष्ट्वा कामिनी कामं मूर्च्छां संप्राप लीलया ।। २२
पुनश्च चेतनां प्राप्य पुनः सा तमुवाच ह ।

तुलस्युवाच—

हे नाथ ते दया नास्ति पाषाणसदृशस्य च ।। २३
छलेन धर्मभङ्गेन मम स्वामी त्वया हतः ।
पाषाणहृदयस्त्वं हि दयाहीनो यतः प्रभो ।। २४
तस्मात्पाषाणरूपस्त्वं भवे देव भवाधुना ।
ये वदन्ति च साधुं त्वां ते भ्रान्ता हि न संशयः ।। २५
भक्तो विनाऽपराधेन परार्थं च कथं हतः ।
भृशं रुरोद शोकार्ता विललाप मुहुर्मुहुः ।। २६

ततश्च करुणं दृष्ट्वा करुणारससागरः ।
नयेन तां बोधयितुमुवाच कमलापतिः ॥ २७
श्री भगवानुवाच—
तपस्त्वया कृतं भद्रे मदर्थे भारते चिरम् ।
त्वदर्थे शङ्खचूडश्च चकार सुचिरं तपः ॥ २८
कृत्वा त्वां कामिनीं सोऽपि विजहार च तत्क्षणात् ।
अधुना दातुमुचितं तवैव तपसः फलम् ॥ २९
इदं शरीरं त्यक्त्वा च दिव्यदेहं विधाय च ।
रामे रम मया सार्धं त्वं रमासदृशी भव ॥ ३०
इयं तनुर्नदीरूपा गण्डकीति च विश्रुता ।
सुपुण्यदा सदा नृणां पुण्ये भवतु भारते ॥ ३१
तव केशसमूहश्च पुण्यवृक्षो भविष्यति ।
तुलसीकेशसम्भूता तुलसीति च विश्रुता ॥ ३२
त्रिषु लोकेषु पुष्पाणां पत्राणां देवपूजने ।
प्रधानरूपा तुलसी भविष्यति वरानने ॥ ३३
स्वर्गे मर्त्ये च पाताले गोलोके मम सन्निधौ ।
भव त्वं तुलसी वृक्षवरा पुष्पेषु सुन्दरी ॥ ३४
गोलोके विरजातीरे रासे वृन्दावने वने ।
भाण्डीरे चम्पकवने रम्ये चन्दन कानने ॥ ३५
माधवीकेतकीकुन्दमालिकामालतीवने ।
वासस्तेऽत्रैव भवतु पुण्य देशेषु पुण्यदशः ॥ ३६
तुलसीतरुमूलेषु पुण्यदेशेषु पुण्यदम् ।
अधिष्ठानं च तीर्थानां सर्वेषां च भविष्यति ॥ ३७

तत्रैव सर्वदेवानां ममाधिष्ठानमेव च।
तुलसीपत्र पतन प्राप्तये च वरानने॥ ३८
स स्नातः सर्वतीर्थेषु सर्वयज्ञेषु दीक्षितः।
तुलसीपत्रतोयेन योऽभिषेकं समाचरेत्॥ ३९
सुधाघटसहस्राणां या तुष्टिस्तु भवेद्धरेः।
सा च तुष्टिर्भवेन्नूनं तुलसीपत्रदानतः॥ ४०
गवामयुतदानेन यत्फलं तत्फलं भवेत्।
तुलसीपत्रदानेन तत्फलं कार्तिके सति॥ ४१
तुलसीपत्र तोयं च मृत्युकाले च यो लभेत्।
मुच्यते सर्वपापेभ्यो विष्णुलोके महीयते॥ ४२
नित्यं यस्तुलसीतोयं भुङ्क्ते भक्त्या च मानवः।
लक्षाश्वमेधजं पुण्यं सम्प्राप्नोति स मानवः॥ ४३
तुलसीं स्वकरे कृत्वा धृत्वा देहे च मानवः।
प्राणांस्त्यजति तीर्थेषु विष्णुलोकं च गच्छति॥ ४४
तुलसीकाष्ठनिर्माणमालां गृह्णाति यो नरः।
पदे पदेऽश्वमेधस्य लभते निश्चितं फलम्॥ ४५
तुलसीं स्वकरे कृत्वा स्वीकारं यो न रक्षति।
स याति कालसूत्रं च यावच्चन्द्रदिवाकरौ॥ ४६
करोति मिथ्याशपथं तुलस्यां योऽत्र मानवः।
स याति कुम्भीपाकं च यावदिन्द्राश्चतुर्दश॥ ४७
तुलसीतोय कणिकां मृत्युकाले च यो लभेत्।
रत्नयानं समारुह्य वैकुण्ठे प्राप्यते ध्रुवम्॥ ४८

पूर्णिमायाममावास्यां च द्वादश्यां रविसंक्रमे।
तैलाभ्यङ्गं च ये कृत्वा मध्याह्ने निशि सन्ध्ययोः ।। ४९
आशौचेऽशुचिकाले च रात्रिवासोऽन्विता नराः ।
तुलसीं ये विचिन्वन्ति ते छिन्दन्ति हरेः शिरः ।। ५०
त्रिरात्रं तुलसीपत्रं शुद्धं पर्युषितं सति ।
श्राद्धे व्रते च दाने च प्रतिष्ठायां सुरार्चने ।। ५१
भूगतं तोयपतितं यद्दत्तं विष्णवे सति ।
शुद्धं च तुलसीपत्रं क्षालनादन्यकर्मणि ।। ५२
वृक्षाधिष्ठातृदेवी या गोलोके च निरामये ।
कृष्णेन सार्धं नित्यं च नित्यं क्रीडां करिष्यसि ।। ५३
नद्यधिष्ठातृदेवी या भारते च सुपुण्यदा ।
लवणोदस्य सा पत्नी मदंशस्य भविष्यति ।। ५४
त्वं च स्वयं महासाध्वी वैकुण्ठे मम सन्निधौ ।
रमासमा च रामा च भविष्यसि न संशयः ।। ५५
अहं च शैलरूपेण गण्डकीतीरसन्निधौ ।
अधिष्ठानं करिष्यामि भारते तव शापतः ।। ५६
कोटिसंख्यास्तत्र कीटास्तीक्ष्णदंष्ट्रा वरायुधैः ।
तच्छिलाकुहरे चक्रं करिष्यन्ति मदीयकम् ।। ५७
एकद्वारं चतुश्चक्रं वनमालाविभूषितम् ।
नवीन नीरदाकारं लक्ष्मीनारायणाभिधम् ।। ५८
एकद्वारं चतुश्चक्रं नवीननीरदोपमम् ।
लक्ष्मीजनार्दनो ज्ञेयो रहितो वनमालया ।। ५९

द्वारद्वये चतुश्चक्रं गोष्पदेन विराजितम्।
रघुनाथाभिधं ज्ञेयं रहितं वनमालया॥ ६०
अतिक्षुद्रं द्विचक्रं च नवीनजलदप्रभम्।
तद्वामनाभिधं ज्ञेयं रहितं वनमालया॥ ६१
अतिक्षुद्रं द्विचक्रं च वनमालाविभूषितम्।
विज्ञेयं श्रीधरं रूपं श्रीपदं गृहिणां सदा॥ ६२
स्थूलं च वर्तुलाकारं रहितं वनमालया।
द्विचक्रं स्फुटमत्यन्तं ज्ञेयं दामोदराभिधम्॥ ६३
मध्यमं वर्तुलाकारं द्विचक्रं बाणविक्षतम्।
रणरामाभिधं ज्ञेयं शरतूणसमन्वितम्॥ ६४
मध्यमं सप्तचक्रं च च्छत्रभूषणभूषितम्।
राजराजेश्वरं ज्ञेयं राजसम्पत्प्रदं नृणाम्॥ ६५
द्विसप्तचक्रं स्थूलं च नवनीरदसुप्रभम्।
अनन्ताख्यं च विज्ञेयं चतुर्वर्गफलप्रदम्॥ ६६
चक्राकारं द्विचक्रं च सश्रीकं जलदप्रभम्।
सगोष्पदं मध्यमं च विज्ञेयं मधुसूदनम्॥ ६७
सुदर्शनं चैकचक्रं गुप्तचक्रं गदाधरम्।
द्विचक्रं हयवक्त्राभं हयग्रीवं प्रकीर्तितम्॥ ६८
अतीव विस्तृतास्यं च द्विचक्रं विकटं सति।
नरसिंहं सुविज्ञेयं सद्यो वैराग्यदं नृणाम्॥ ६९
द्विचक्रं विस्तृतास्यं च वनमालासमन्वितम्।
लक्ष्मीनृसिंहं विज्ञेयं गृहिणां च सुखप्रदम्॥ ७०

द्वारदेशो द्विचक्रं च सश्रीकं च समं स्फुटम्।
वासुदेवं तु विज्ञेयं सर्वकामफलप्रदम्।। ७१
प्रद्युम्नं सूक्ष्मचक्रं च नवीननीरदप्रभम्।
सुषिरच्छिद्रबहुलं गृहिणां च सुखप्रदम्।। ७२
द्वे चक्रे चैकलग्ने च पृष्ठं यत्र तु पुष्कलम्।
सङ्कर्षणं सुविज्ञेयं सुखदं गृहिणां सदा।। ७३
अनिरुद्धं तु पीताभं वर्तुलं चातिशोभनम्।
सुखप्रदं गृहस्थानां प्रवदन्ति मनीषिणः ।। ७४
शालग्रामशिला यत्र तत्र सन्निहितो हरिः ।
तत्रैव लक्ष्मीर्वसति सर्वतीर्थसमन्विता।। ७५
यानि कानि च पापानि ब्रह्महत्यादिकानि च।
तानि सर्वाणि नश्यन्ति शालग्रामशिलार्चनात्।। ७६
छत्राकारे भवेद्राज्यं वर्तुले च महाश्रियः ।
दुःखं च शकटाकारे शूलाग्रे मरणं ध्रुवम्।। ७७
विकृतास्ये च दारिद्र्यं पिङ्गले हानिरेव च।
भग्नचक्रे भवेद्व्याधिर्विदीर्णे मरणं ध्रुवम्।। ७८
व्रतं दानं प्रतिष्ठा च श्राद्धं च देवपूजनम्।
शालग्रामस्य सान्निध्यात्प्रशस्तं तद्भवेदिति।। ७९
स स्नातः सर्वतीर्थेषु सर्वयज्ञेषु दीक्षितः ।
सर्वयज्ञेषु तीर्थेषु व्रतेषु च तपस्सु च।। ८०
पाठे चतुर्णां वेदानां तपसां करणे सति।
तत्पुण्यं लभते नूनं शालग्रामशिलार्चनात् ।। ८१

शालग्रामशिलातोयैर्योऽभिषेकं सदाचरेत्।
सर्वदानेषु यत्पुण्यं प्रदक्षिणं भुवो यथा ।। ८२
शालग्रामशिलातोयं नित्यं भुंक्ते च यो नरः ।
सुरेप्सितं प्रसादं च लभते नात्र संशयः ।। ८३
तस्य स्पर्शं च वाञ्छन्ति तीर्थानि निखिलानि च ।
जीवन्मुक्तो महापूतोऽप्यन्ते याति हरेः पदम् ।। ८४
तत्रैव हरिणा सार्धमसंख्यं प्राकृतं लयम् ।
यास्यत्येव हि दास्ये च नियुक्तो दास्यकर्मणि ।। ८५
यानि कानि च पापानि ब्रह्महत्यासमानि च ।
तं दृष्ट्वा च पलायन्ते वैनतेयादिवोरगाः ।। ८६
तत्पादरजसा देवी सद्यः पूता वसुन्धरा ।
पुंसां लक्षं तत्पितॄणां निस्तरेत्तस्य जन्मतः ।। ८७
शालग्रामशिलातोयं मृत्युकाले च यो लभेत् ।
सर्वपापविनिर्मुक्तो विष्णुलोकं स गच्छति ।। ८८
निर्वाणमुक्तिं लभते कर्म भोगात्प्रमुच्यते ।
विष्णोः पदे प्रलीनश्च भविष्यति न संशयः ।। ८९
शालग्रामशिलां धृत्वा मिथ्यावाक्यं वदेत्तु यः ।
स याति कुम्भीपाके च यावद्वै ब्रह्मणो वयः ।। ९०
शालग्रामशिलां धृत्वा स्वीकारं यो न पालयेत् ।
स प्रयात्यसिपत्रं च लक्षमन्वन्तरावधि ।। ९१
तुलसीपत्र विच्छेदं शालग्रामे करोति यः ।
तस्य जन्मान्तरे कान्ते स्त्रीविच्छेदो भविष्यति ।। ९२

तुलसीपत्रविच्छेदं शङ्खे यो हि करोति च।
भार्याहीनो भवेत्सोऽपि रोगी च सप्तजन्मसु।। ९३
शालग्रामं च तुलसीं शङ्खं चैकत्र एव च।
यो रक्षति महाज्ञानी स भवेच्छ्रीहरेः प्रियः।। ९४
सकृदेव हि यो यस्यां वीर्याधानं करोति च।
तद्विच्छेदे तस्य दुःखं भवेदेव परस्परम्।। ९५
त्वं प्रिया शङ्खचूडस्य चैकमन्वन्तरावधि।
शङ्खेन सार्धं त्वच्छेदः केवलं दुःखदस्तथा।। ९६
इत्युक्त्वा श्रीहरिस्तां च विरराम च नारद।
सा च देहं परित्यज्य दिव्यरूपं विधाय च।। ९७
यथा श्रीश्च तथा सा चाप्युवास हरिवक्षसि।
स जगाम तथा सार्धं वैकुण्ठं कमलापतिः।। ९८
लक्ष्मीः सरस्वती गङ्गा तुलसी चापि नारद।
हरेः प्रियाश्चतस्रश्च बभूवुरीश्वरस्य च।। ९
सद्यस्तद्देहजाता च बभूव गण्डकी नदी।
ईश्वरः सोऽपि शैलश्च तत्तीरे पुण्यदो नृणाम्।। १००
कुर्वन्ति तत्र कीटाश्च शिलां बहुविधां मुने।
जले पतन्ति या याश्च फलदास्ताश्च निश्चितम्।।१०१
स्थलस्थाः पिङ्गला ज्ञेयाश्चोपतापाद्रवेरिति।
इत्येवं कथितं सर्वं किं भूयः श्रोतुमिच्छसि।। १०१

*।। इति श्री देवीभागवते नवमस्कन्धे चतुर्विंशोध्यायः ।।*

—★—

## அத்தியாயம் - 24

துளஸியிடமிருந்து கற்பைப் பறிக்க விஷ்ணு ஏற்ற வேஷத்தைப் பற்றிக் கேட்ட நாரதரிடம் நாராயணன் கூறினார். தேவர்களுக்கு உதவும் வகையில் விஷ்ணு சங்கசூடனின் கவசத்தை மாயையால் ஏற்று அவனது வேடமேற்று துளஸியின் கற்பைக் குலைக்க அவளிருக்குமிடம் சென்று வாயிலில் நின்று துந்துபி முழங்கி ''வெற்றி'' ''வெற்றி'' என உரக்கக் கூறி துளஸியை எழுப்பினார். அவள் ஆனந்தமடைந்து ஜன்னல் வழியே ராஜவீதியில் தன் கணவன் வருவதைக் கண்டாள். உடன் எழுந்து அந்தணர்களிடம் மங்கள ஆசி பெற்று ஏழைகளுக்கும் நற்செய்தி சொல்பவருக்கும் வாரி வழங்கினாள். தேரிலிருந்து இறங்கிய கணவரை துளஸி வரவேற்று திருவடியலம்பி, வணங்கி அழுதாள். விலையற்ற ரத்தினம் போன்ற கணவரை ரத்தின ஸிம்ஹாஸனத்தில் அமர்த்தி மணக்கிற தாம்பூலமளித்தாள்.

''என் பிறவி ஸபலமாயிற்று. போருக்குச் சென்று திரும்பிய கணவரை மறுபடி வீட்டில் காண்கிற பாக்யம் பெற்றேன் என்றாள்.

புன் சிரிப்பும் கடைக் கண்பார்வையும் காமமும் புல்லரிப்பும் கொண்ட துளஸி ''உலகையே அழிக்கிற ஆற்றல் பெற்ற சிவனுடன் நிகழ்ந்த போரில் வெற்றி எவ்வாறு கிட்டியது'' எனக் கேட்டாள். பகவான் கூறினார். - ''எங்களிடையே போர் ஒரு ஆண்டு காலம் நடந்தது. அஸுரர்கள் அனைவரும் அழிந்துவிட்டனர். ப்ரஹ்மா எங்களிடையே உடன் பாடு வரச் செய்தார். பிரும்மாவின் ஆணைப்படி தேவர்களின் அதிகாரம் திரும்பத் தரப்பட்டது. நான் இங்கு வந்தேன். சிவன் தன் உலகம் சென்றார் என்று கூறிக் கொண்டே அவளுடன் ரமிக்கத் தொடங்கினார். உறவு கொண்ட வகையில் மாறுதலை உணர்ந்த துளஸி ''மாயாவியே ! நீ யார்? என் கற்பைக் குலைத்துவிட்டாய். அதனால் உன்னைச் சபிப்பேன்'' என்றாள். உடன் அவள் முன் பகவான் கார்மேக வண்ணத்துடன் மஞ்சளாடையுடன் உள்ள தன் சுய உருவைக் காண்பித்தார். துளஸி உடன் மயக்க முற்றாள். மறுபடி தெளிவு பெற்றதும் கூறினாள்.

ஈசனே! கல்மனம் படைத்த உமக்குத் தயை இல்லை. ஏமாற்றி என் கற்பைக் குலைத்து என் கணவரைக் கொன்றீர். கல் மனம் படைத்த நீர் கல்லாவீர். உம்மை நல்லவர் என நினைத்த அனைவரும் ஏமாந்து விட்டனர். உம் பக்தர் ஒரு தவறும் செய்யாதவர். பிறர் நலனுக்காக ஏன் அவரைக் கொன்றீர் எனக் கதறி அழுதாள். அவளுக்கு ஆறுதலளிக்க நயத்துடன் நிலையை பகவான் உணர்த்தினர்.

''நல்லவளே ! நீ என்னைக் குறித்து பாரத பூமியில் தவம் புரிந்தாய். உன்னைப் பெற விரும்பி சங்க சூடன் தவமிருந்தான். அவன் தவப் பயனை அவன் பெற்றான். உன் தவப்பயனை நீ பெறுவாய். இந்த உடலை நீத்து, திவ்ய உடல் பெறுவாய். இந்த உடல் கண்டகி நதியாகப் புகழ் பெறும். உன் கேசக்கற்றை புனிதமாகி, துளஸி எனப் புகழ் பெறும்.

மூவுலகிலும் வழிபாட்டிற்குரிய இலை-பூக்களில் துளஸி முதலிடம் பெறும். மூவுலகிலும் கோலோகத்திலும் நீ சிறப்பு பெறுவாய். கோலோகம், விரஜா நதிக் கரை, ராஸ மண்டலம், பிருந்தாவனம், பாண்டீர வனம், சம்பகவனம், சந்தனவனம் மற்றும் பூந்தோட்டங்கள் உன் இருப்பிடமாகும். துளஸியின் அடியில் தீர்த்தங்கள் அனைத்தும் பெருமை பெறும். துளசி இலை தன்மீது விழட்டுமென்றே தேவர்கள் அதனடியில் தங்குவர். துளசி சேர்ந்த நீராட எல்லா தீர்த்தங்களிலும் நீராடியதாகும். அம்ருதக் குடம் ஆயிரம் கொண்டு நீராடியதாகும். கோடிப் பசுக்களைத் தானம் செய்ததாகும். மரணத் தருவாயில் துளஸீ நீர் பருக, துளஸி கையில் வைத்திருக்க பாபம் நீங்கி வைகுந்தம் செல்வான். அசுவமேத வேள்வி புரிந்த புண்யம் கிட்டும்.

துளசிக் கட்டையாலான மணி மாலையைத் தரிப்பவன் அசுவமேத வேள்விப் பயன் பெறுவான். துளஸியைக் கையில் கொண்டு சொன்ன வாக்கைக் காப்பாற்றாதவன் நரகம் செல்வான். பௌர்ணமி, அமாவாஸ்யை, த்வாதசி, மாதப் பிறப்பு, எண்ணெய்க் குளி நாள், நடுப்பகல், இரவு, இரு ஸந்த்யாகாலம், தீட்டு, தூய்மைக் குறைவுள்ள நாள், இவைகளில் இரவில் கட்டிய ஆடையுடனுள்ளவர் போன்றவர் துளஸியைப் பறிக்கலாகாது. பறிப்பதால் விஷ்ணுவின் தலையைக் கிள்ளி எறிவது போன்ற

பாபம் நேரும். துளஸி பறித்து மூன்று நாட்களுக்கு 'நாள் கடந்தது' என்ற தோஷமில்லை. அது சுத்தமானதே. ச்ராத்தம், விரதம், தானம், ப்ரதிஷ்டை முதலானதில் அதைப் பயன் படுத்தலாம். பூமியில் மற்றும் நீரில் விழுந்த இலை, விஷ்ணு பூஜையில் பயன்படுத்தப்பட்டது இவற்றை நீர்விட்டலம்ப மறுபடி பயன்படுத்தத் தக்கவை.

கோலோகத்தில் மரங்களின் தெய்வமாக இருப்பாய். க்ருஷ்ணனின் லீலையில் நீ பங்கு பெறுவாய். பாரத தேசத்தில் கண்டகியாக நதிகளின் தேவியாவாய். லவண ஸமுத்ரத்தின் பத்தினிகளில் நீயும் ஒருவளாவாய். வைகுண்டத்தில் லக்ஷ்மியாக விளங்குவாய். நானும் கண்டகியின் கரையில் மலையாக நின்று கண்டகியைத் தாங்குவேன்.

கண்டகி பெருகுகிற மலையில் கோடிக் கணக்கான புழுக்கள் தம் பற்களால் கூழாங்கற்களில் என் சக்கிர வடிவைப் பொறிக்கும். (ஸாலக்ராமம்) ஒருதுவாரமும் நான்கு சக்ரங்களும் வனமாலை சூடியதும் புதுமேக வண்ணத்திலுள்ளதுமான கூழாங்கற்கள் லக்ஷ்மீ நாராயணர் என்ற பெயர் பெறும். வனமாலையில்லாதிருந்தால் லக்ஷ்மீ ஜநார்தனர். இரு த்வாரங்களும் நான்கு சக்கிரங்களும் குளம்படி ரேகையுள்ளதும் வனமாலை இல்லாதிருந்தால் ராமர். மிகச் சிறியது, இரு சக்ரமுள்ள கார்மேக நிறம் கொண்டது வாமனர். மிகச்சிறியது இரு சக்ரமுள்ள வனமாலை கொண்ட ஸாலக்ராமம் ஸ்ரீதரர், இல்லறத்தானுக்குச் செல்வம் தருவது. பெரிது, உருண்டை வடிவம், வனமாலை, இரு சக்ரம் கொண்டது. தாமோதரர். உருண்டை வடிவம் இருசக்ரம் அம்புக் குறி, நாணற்புல் ஒட்டியது ரணராமர். நடுவடிவில் ஏழு சக்ரம், குடை உள்ளது ராஜ ராஜேச்வரர், அரசாட்சி தரும். இரு ஏழு சக்ரங்கள், பெரியது, மேக வண்ணம், அனந்தர் அறம் பொருள் இன்பம் வீடு தரும். சக்ர உருவம், இரு சக்ரம், மேக வண்ணம். குளம்படி உள்ளது - மதுஸூதனர். ஒரு சக்ரம் - ஸுதர்சனர். சக்ரம் மறைந்துள்ளது. கதாதரர். இருசக்ரம் ஹயக்ரீவர் போன்ற வடிவம் - ஹயக்ரீவர். துவாரவாய் விரிந்தது, இரு சக்ரம், ஸமனற்ற வடிவம் - நரஸிம்ஹர் - வைராக்யம் தரும்.

இரு சக்ரம், பரந்தவாய், வனமாலையுள்ளது லக்ஷ்மீ ந்ருஸிம்ஹர். இல்லறத்தாருக்கு நல்லது. வாயில் இரு சக்ரம், அழகுள்ளது ஸமமானது - வாஸுதேவர் - விரும்பியதைத் தருபவர். மேகநிறம் மிகச் சிறிய சக்ரம், வாயினுள் பல ஓட்டைகள் - ப்ரத்யும்னர். இல்லறத்தாருக்கு நல்லது. ஒன்றாக இணைந்த இரு சக்ரங்கள், முதுகு விரிந்தது - ஸங்கர்ஷணர் - இல்லறத்தாருக்கு நல்லது. செம்மஞ்சள் நிறம், உருண்டை வடிவம் - அநிருத்தர். இல்லறத்தாருக்கு நல்லது.

சாலக்ராம சிலை உள்ள இடத்தில், விஷ்ணுவும் லக்ஷ்மீயும் தீர்த்தங்களனைத்தும் இருப்பர். பாபங்களனைத்தும் விலகும். சக்ரம் போன்ற வடிவுள்ளது ஆட்சி தரும். உருண்டையாயிருப்பது லக்ஷ்மீயைத் தரும். வண்டி போன்றது துயர் தரும். சூல நுனி கொண்டது மரணத்தைத் தரும். த்வாரத்தின் முகம் கோணலானால் ஏழ்மை நேரும். செந்நிறமுள்ளது அழிவைத் தரும். சக்ரம் உடைந்திருந்தால் நோயும், பிளந்திருந்தால் மரணமும் நேரும்.

சாலிக்ராமம் இருக்குமிடத்தில் செய்யப் பெறுகிற விரதம், தானம், ப்ரதிஷ்டை,ச்ராத்தம், மற்றும் தெய்வ வழிபாடு, சிறந்த பலனைத் தரும். சாலிக்ராம சிலையை விஷ்ணு வென வழிபட எல்லா புண்ய கர்மங்களையும் செய்ததாகும். சாலிக்ராம அபிஷேகம், அபிஷேக நீரைப் பருகுதல், சாலக்ராமத்தைத் தொடுவது இவை புனிதமாக்குபவை. மரணத் தருவாயில் சாலிக்ராமாபிஷேக நீரைப் பருகுவது மேனிலை பெற உதவும். அதனை வைத்துக் கொண்டு செய்கிற நற்செயல் நல்ல பலனைத் தரும். கெட்ட செயல் கோரமான பின் விளைவைத் தரும். சாலக்ராமத்தின் மீது துளஸி போடுவதைத் தடுப்பது மனைவியை இழக்கச் செய்யும். சாலிக்ராமம், சங்கு, துள்ஸி இவற்றைச் சேர்த்துவைப்பது நல்லது. (94)

நீ ஒரு மன்வந்தரம்வரை சங்கசூடனுடன் வாழ்ந்துள்ளாய். உங்களைப் பிரிப்பது துயரம் தரவல்லதே என்று விஷ்ணு விளக்கியதும் துளஸி உடலைவிட்டு உயிர் நீங்கியது. திவ்ய வடிவமேற்று லக்ஷ்மீ போன்று விஷ்ணுவின் மார்பில் ஏறி விஷ்ணுவுடன் வைகுண்டம் சென்றாள். லக்ஷ்மீ ஸரஸ்வதீ கங்கா துளஸி என நால்வரும் விஷ்ணுவுடன் இணைந்து வாழ்ந்தனர்.

